திருவாமாத்தூர்க் கௌமார சபை வெளியீடு 110.

உ
குருவே துணை

# பாண்டிச்சேரி
# சித்திவிநாயகப்பெருமான் மும்மணிக்கோவை



ஆசிரியர் :
மகான். வண்ணச்சரபம்
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும்
அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்
திருவாமாத்தூர்

---

புதுவை-அகத்தியர் இல்லம் வெளியீடு 10
பதிப்பாளர் :
டாக்டர், திரு. B. மாசிலாமணி, I. M. P., அவர்கள்
46, அகத்தியர் இல்லம், ரங்கப்பிள்ளை தெரு. பாண்டிச்சேரி-1, போன்: 288



புதுவை-அகத்தியர் இல்லத்தில்
அகத்தியர் ஆராதனை விழா 31-1-71-ல் நடைபெற்றபோது
வெளியிடப்பெற்ற
நினைவு மலர்

# முன்னுரை.



புதுவைவளர் ஐங்கரப் புத்தேள் புனைய
மதுரமிகும் இந்நூல் வகுத்தோன்—முதுபுகழ்சேர்
கொண்டதிரு நெல்லை குலவுவண் ணச்சரபத்
தண்டபா ணிக்குரவன் றான்.

**ஊர் :** பாண்டிச்சேரி என்று விளங்கும் புதுவை, கடற்கரையில் நெய்தல் நிலப்பகுதியிலமைந்துள்ளது. புதுவை என்ற சொல், ஆண்டாள் அவதரித்த திருவில்லிபுத்தூருக்கும் அமைந்துள்ளது. "புதுவைப் பட்டர்பிரான் கோதை" என்று ஆண்டாள் திருப்பாவையிற் கூறியிருப்பதுடன், "அன்னவயற் புதுவை ஆண்டாள்" எனப் பிற்காலத்தவரும் கூறியிருப்பதாலும் அறியலாம். புதுச்சேரி என்று மக்களாற் பேசப்படும் புதுவை, பாண்டிச்சேரி என்றும், பாண்டி என்று சுருக்கப்பேரிலும் தற்போது வழங்கக் காண்கிறோம்.

'சேரி' என்றால் மக்கள் சேர்ந்து வாழப்பெறுவது என்ற தொடர்பில், முதலில் வெறும் கடற்கரைப்பகுதியாயிருந்து, புதிதாகச் சிறிது சிறிதாக மக்கள் சேர்ந்து வாழ ஏற்பட்ட காரணத்தால் புதுச்சேரி என்று பெயர் வந்திருக்கலாம் போலும்.

**திருக்கோயில்கள் :** இப்பதியில் வேதபுரீசுவரர், திரிபுரசுந்தரி, வரதராஜப்பெருமாள், முருகப்பெருமான் ஆகிய கடவுளர்கட்கு, திருக்கோயில்கள் சிறப்பாக அமைத்து மக்கள் வழிபட்டு வருவதை இன்று காண்கிறோம். இதைப்போலவே, இவ்வூரில் ஸ்ரீ மணக்குள விநாயகர் சிறப்பு வாய்ந்து காணப்பெறுகிறார். இத்துடன் ஆவண வீதி என்ற கடைவீதியில் திருக்கோயில் கொண்டிருக்கும் சித்திவிநாயகப்பெருமானும் தன்னை வழிபடும் அன்பர்கட்கு வற்றாத திருவருள் வழங்கிக் காட்சிதருகிறார்

**நூலமைப்பு :** மூன்றுவித மணியால் கோக்கப்பெற்ற மாலைபோல் இந்நூல் மூன்றுவிதமாக ஆசிரியப்பா, வெண்பா, கட்டளைக்கலித்துறை என்ற யாப்புகளால் அடுக்கடுக்காகப் பத்தடுக்குச் சேர்த்து 30 பாடலால் அமைக்கப்பெற்றதாகும். இந்நூல்போல இரட்டைமணிமாலை, நான்மணிமாலை, பஞ்சரத்தினம் நவமணிமாலை என்றெல்லாம் நூல்கள் பலவுள. ஆவண வீதியில் திருக்கோயில்கொண்டு விளங்கும் விநாயகப்பெருமானுக்கு இந்நூலேயன்றி, இந்நூலாசிரியரால் வேறு சில பதிகங்களும் பாடப் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**ஆசிரியர் :** இவ்வருமை நூலினை அருளியவர் மகான் வண்ணச்சரபம், திருப்புகழ்ச்சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும் அருள்மிகு. தண்டபாணி சுவாமிகளாவர். இவர் 1839-ல் திருநெல்வேலியில் தோன்றி இளமையில் முருகனருளால் தமிழ்க் கவிதைகள் இயற்றும்தன்மை வாய்ப் பெற்றார். வேல் வழிபாடு, ஆறெழுத்தை உருவேற்றுதல் முதலியவைகளில் பெருஞ்சிறப்புப்பெய்தினர் பலதல வழிபாட்டினை மேற்கொண்ட இவர், ஆங்

காங்குள்ள கடவுளர்மீது பல துதிநூல்கள் அருளினர். அத்துடன் நீதிநூல்கள், இலக்கிய இலக்கண நூல்கள், காவிய நூல்கள், சாத்திர நூல்கள், இசை, நாடக நூல்கள் எனப் பலவகையில் இயற்றியுள்ளார். மேலும் மருத்துவத் துறையிலும் வாகட பிள்ளைத் தமிழ்நூல் செய்துள்ளார். இவ்வாறு தாம் அருளிய ஒரு லட்சம் பாடல்களைத் தாமே பனைஓலையில் எழுதவும் செய்தனர். இவரால் எழுதப்பெற்ற பனைஓலைச் சுவடியின் வரிவடிவங்களைக் கண்டோர் வியந்து பாராட்டாமலிரார் என்பதுண்மை.

சமயபேதச்சார்பின்றிப் பல்லாயிரம் பாடல்களை அருளிய இவர் சிவகருணை நெறியை வளர்த்து இறுதியில் விழுப்புரத்தை அடுத்த திருவாமாத்தூர்ச் சிவ தலத்தில் தங்கி எல்லைதாண்டா விரதமுடன் தவம்புரிந்து 1898-ல் ஞானசமாதி கொண்டார். இவரது மரபினரால் மடாலயம், சமாதிக்கோயில் ஆதியன பாதுகாக்கப்பெறுகின்றன.

பதிப்பாளர் : இந்நூலாசிரியரான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இவ்வூரில் பல்லாண்டுகள் தங்கிப் பல அருளாடல்கள் செய்து பலரும் போற்றும் பாங்குடன் திகழ்ந்தனர். அவ்வமயம் இவரால் இவ்வூர் கடவுளர்மீது பாடப்பெற்ற நூல்கள் மிகப்பல. அவையனைத்தும் அச்சிடப்பெறவில்லை என்றாலும் சில பகுதிகள் பதிக்கப்பெற்றுள்ளன. குறிப்பாக முருகப்பெருமான் மீதுள்ள நூல்களுள் ஒரு பகுதியை இந்நூலாசிரியருக்கு இவ்வூரில் 24—5—70-ல் டாக்டர் திரு. மாசிலாமணி அவர்கள் பெருமுயற்சியால் விழாக் கொண்டாடியபோது புதுவை, ஆனந்தா எம்போரியம் முதல்வர் திரு. N. கோவிந்தசாமி அவர்கள் தம் பொருட்செலவில் பதித்தனர். மற்றொரு பகுதியை டாக்டர் மாசிலாமணி அவர்கள் நூலாசிரியர் குருபூசை விழா மலராகத் தம் பொருட்செலவில் வெளியிட்டார்.

இதுபோலவே எஞ்சியுள்ள புதுவைக்குரிய நூல்களையும், பிறவற்றையும் இயன்றவரை பதிக்கவேண்டும் என்ற உறுதியுள்ளம் கொண்ட டாக்டர் அவர்கள், ஆண்டுதோறும் அகத்தியர் விழாவில் சுவாமிகள் நூல் ஒன்றை வெளியிடுமுறையில் இவ்வாண்டு புதுவை சித்திவிநாயகர் மும்மணிக் கோவை நூலைப் பதித்து வழங்குகிறார்.

வேண்டுகோள் : விநாயகப்பெருமான் விரும்பியபடி இந்நூலை சுவாமிகள் பாடியுள்ளார்கள். அரிய பல கருத்துகளும், விநாயகப்பெருமான் சிறப்பியல்புகளும் நிறைந்துள்ள இந்நூலில் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து போற்றிப் படிப்பவருக்கும், பதித்து வழங்கிய டாக்டர் திரு. மாசிலாமணி அவர்கட்கும் சித்திவிநாயகர் திருவருளும், அகத்திய முனிவர் அருட்கடைக்கண்ணோக்கும் உண்டாகுமாறு வேண்டுகிறேன்.

தி. மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர்,
கௌமாரமடாலயம்,
திருவாமாத்தூர் P. O. (வழி விழுப்புரம்)

31—1—'71.

# பதிப்புப்பாயிரம்

அலைச்சீர்ப் புதுவை அகத்தியரில் லத்திற்
சிலைச்சீர் மிகவமைத்துச் செய்ய—கலைக்கோயில்
ஆக்கும் புகழ்மாசி லாமணியா ரன்புமிகத்
தேக்கும் களஞ்சியமாச் செப்பு.

அகத்தியரில் லத்தில் அகத்தியர்வி ழாவை
மிகச்சிறப்பாம் இன்னிசைகள் மேவ—உகப்பாய்ச்
செயுமாசி லாமணியார் செந்தமிழ்நூ லொன்றும்
உயுமா றளித்திடுவ துண்டு.

வண்ணச் சரபகுரு மாதவனூர் தண்புதுவை
நண்ணவளர் சித்திவி நாயகன்மேல்—உண்ணயந்து
பாடுமும்ம ணிக்கோவைப் பாட்டையச்சிட் டுத்தந்தார்
பீடுபெற வாழ்க பெரிது.

சித்த மருத்துவநூற் றேர்ச்சி பெறும்புகழும்
நத்தவருங் கைராசி நன்மையுஞ்சேர்—வித்தகனூர்
மாசில் மணியாய் வளர்புதுவைக் கோர்மணியாய்த்
தேசிலங்க வாழ்க சிறந்து.

தண்டபா ணிப்பெரியோன் றன்விழா வைப்பலசீர்
கொண்டமையச் செய்த குணமுடையார்—விண்ட
மருத்துவச் சீர்தோய்ந்த வாகடபிள் ளைப்பா
விருப்பொடச்சிட் டீவனினி மேல்.

களங்கமிலா நெஞ்சும் கவின்தமிழி லின்பும்
உளங்கனிந்து பேசு முயர்வும்—வளங்கொள்
மகத்துவஞ்சேர் அன்புமிகு மாசில் மணியார்
இகத்திலின்பாய் வாழ்கஎன்று மே.

நூலாசிரியர் பெயரர்,
**தி. செ. முருகதாச ஐயா,**
கௌமார மடாலயத் தலைவர்,
திருவாமாத்தூர் P. O.,
விழுப்புரம் வட்டம்.

தங்கல் :
தண்டபாணி சுவாமிகள் மடம்,
அடிவாரம்,
பழநி.

உ
கணபதி துணை.



# புதுவை - ஆவணவீதி
# சித்தி விநாயகர் - மும்மணிக்கோவை

## காப்பு - வெண்பா

சீரார் தமிழ்ப்புதுவைச் சித்தி விநாயகனே!
ஆராதிப் பார்க்கருளும் ஐயனே!—நாரார்ந்த
மும்மணிக் கோவை மொழிகின்றேன், நீயென்முன்ஓர்
[1]செம்மணிக்கோ டென்னத் திகழ்.

## நூல்

### அகவற்பா

திருவருள் வளத்தாற் சீரிய சிவன்றன்
ஒருபெருங் களிறுய் உமையொரு பிடியாய்ப்
புணரும் நாளினிற் பொன்னுல கினரும்
தணவரு மகிமைத் தவத்தினர் தாமும்
ஏனைமா னிடரும் இன்புறற் பொருட்(டு ஓர்
ஆனைமா முகமும் ஐந்துகைம் மலரும்
இகழ்வரும் பொருளாம் இணைமலர்த் தாளும்
திகழ்தரத் தோன்றும் சித்தி விநாயக!
நின்புது வைக்கண் நெடுநா ளிருந்தும்
அன்பு நீஇய அருந்தமிழ் தொடுத்திலன்,
[2]நென்னற் பொழுதோர் நிமித்தத் தியைந்தேன்.
என்னகத் தினில்ஓர் இன்கன வருளினை
அந்த உண்மை அவிர்தர அடியேன்
சிந்தனை செய்யும் சிறப்பளித் தருளே. 1

---

1 சிவந்த இரத்தின மலைபோன்ற திருவுருடன்.
2 நென்னல் நேற்று, நெருநல் என்பதன் திரிபு.

## வெண்பா

[1] அருவபர வாதிகளுக் கஞ்சா தடியேன்
[2] உருவபரம் சொல்மாண் புதவாய்—திருவருட்சேர்ச்
சித்தி விநாயகனே தென்புதுவைச் சிந்துரமே!
பத்திசெய்வார் ஆர்க்கும் படி. 2

## கட்டளைக்கலித்துறை

படிமிகப் போற்றும் புதுவா புரியிற் பரவுமன்பர்
மிடியறத் தீர்த்து விளையாடும் சித்தி விநாயகனே
கொடியணி மூடிகத் தெந்தாய்நின் வாயன்று கூறமுண்மை
அடியரெல் லாமறிந் தேத்தஇன் றுடல்ஒன்(று) ஆற்றுதியே. 3

## அகவற்பா

ஆற்றுப் புனலும் அவிரிள மதிவெண்
கீற்றும் கொன்றையும் கிளர்மணி அரவும்
செஞ்சடைக் காட்டிற் சிவனெனப் புனைந்து
குஞ்சர முகத்தொடு குலவு கின்றாய்!
அன்புளார் நால்வர்க்(கு) அவன்அரு ளியவா(று)
இன்புறக் கொடுத்தென் இயற்றமிழ் புனைவாய்!
என்ன நம்பி ஈண்டடுத் திரந்தேன்
மின்ன தார்வ நிகழ்ச்சியெத் தகைத்தோ?
பூவினம் உகுபைம் பொழில் மலிபுதுவை
மேவிய சித்தி விநாயகச் சுடரே. 4

## வெண்பா

[3] சுடர்மூன்றும் கண்ணாகத் தோன்றும்உனை விட்(டு)ஓர்
கடவுளெங்கு போய்அடியேன் காண்பேன்—இடர்தவிர்த்தாள்
செல்வப் புதுவைநகர்ச் சித்தி விநாயகனே
எல்லைத்த தொந்தியெம்மா னே. 5

## கட்டளைக்கலித்துறை

மானேருங் கண்ணியர் மோகாந்த கார வலையினிடை
தானே விழுந்து பரதவித் தேனைமெய்த் தவந்தருவாய்
பானேர்சொல் வல்லவை பாகா! புதுவைப் பதிபுரக்கும்
கோனேமெய்ச் சித்தி விநாயக னேநங் குலதெய்வமே. 6

---

1 கடவுள் அருவமாயிருப்பனென்பவர்முன், அஞ்சாமல், கடவுள்.
2 உருவமாயிருப்பவரென்பவருடன் கூடி உன்புகழ் கூறச்செய்க.
3 சுடர்மூன்று–சந்திரன், சூரியன், அக்கினி என்பன.

### அகவற்பா

தெய்வம் ஆயிரம் சேணிடை திகழினும்
மெய்வழி பாடுறும் மேலவர் விரும்பும்
தொழில்இடை யூறு தொலைத்தருள் புரிவான்
கழிமதக் கலுழிக் களிற்றுமா முகத்துச்
சித்தி விநாயகத் திருப்பெயர் புனைந்து
பத்திமை யுடையார் பலர்புகழ் புதுவை
நன்னகர் வாழும் நாதனென் றறியார்
என்ன மாதவம் இயற்றினும் அவமே. 7

### வெண்பா

அவமுயன்று பல்வா(று) அயருந் தமியேன்
தவமுயன்று வாழுநலந் தந்தாள்—சிவன்விரும்பும்
வேதபுரிச் சித்தி விநாயகனே! என்மனப்பூ
மீதமர்ந்தி லாயோ விளம்பு. 8

### கட்டளைக்கலித்துறை

[1]விளங்குந் துதிக்கைப் புனலாட்டி நீறும் விரைந்தெனது
குளந்தனிற் பூசிய தின்றுகொ லோ?உண்மை குன்றிடுமோ
களங்கநெஞ் சாளர் இசைாத வாறருட் காட்சிநல்காய்
வளங்குல வும்புது வைச்சித்தி யானைஎன் வானவனே. 9

### அகவற்பா

வான நாட்டினர் வாழ்வையும் மதியா
யான்அடி யவர்பே ரின்பம்எய்தா(து)
இகத்தினர் சுழலும் ஏடணைப் பெருக்கென்
அகத்துறத் தகுமோ? அருணை யூரில்
நுவலிய மொழிப்பயன் நுடங்கா தருளிக்
கவலைமுற் றொழித்துக் களிக்கடல் [2]வருத்தாய்
விளாநகர் அதனில் விளம்பிய விதம்என்
உளமலர் நடுமிக் கொளிர்ந்துள தறிவாய்
எத்தகை நலந்தம் திடநாட் செலினும்

1 தும்பிக்கையினால், திருநீற்றினைத்தொட்டு, இவர் நெற்றியிற் பூசியும், தும்பிக்கை நீரால் முழுக்காட்டியும் அருளிய அநுபவம். குளம்—நெற்றி.

2 வருத்தாய்—வரும்படி புரிவாய். விருவிப்பாய் என்பதன் மரூச்சொல். இது பாண்டிநாட்டு மரபு.

மைத்தகைக் கயமை மலிதரு மனத்தார்
பாவிரந் திளைக்கும் பருவரல் உறுமா(று)
வேலினன் விளைத்த வினையி(ன்)னே களைவாய் !
அன்னோன் ஏங்குற ஆடகச் சிலையார்
முன்ஆங் கியற்றும் முதன்மைபெற் றுயர்ந்தாய்
ஔவை பாடும் அருந்தமிழ் புனைந்தும்
செவ்வையில் சிறியேன் செய்சொலும் விழைந்தாய்
சித்தி விநாயக ! சிறுவர்போற் றிடினும்
புத்திமிக் குறச்செயும் புதுவை வாரணமே. 10

வெண்பா

[1]வாரணத்தைக் கொன்(று)ஆகு வாகனமாச் செய்தேறும்
காரணத்தை யானறியக் கற்பிப்பாய்—தேரணவும்
வீதி மலிபுதுவை மேயசித்தி வேழமே
ஏதிலர்க் கு,யான் சொல்லிவெல்ல வே. 11

கட்டளைக்கலித்துறை

வெல்லங் கலந்தஎள் ளுண்டையும் பறப்பல் வியன்கனியும்
நல்லன்ன மாதியும் நான்படைத் தேத்தும் நலந்தருவாய்
மல்லலஞ் சோலைப் புதுவா புரிச்சித்தி வாரணமே
அல்லல்[2]முந் நீர்வற்றி ஆனந்த வாரி யதுபொங்கவே. 12

அகவற்பா

பொங்குமும் மதத்துப் புகர்முகக் குன்றே
சங்குறு செவியான் தவப்பெறும் பேறே
மலைமகள் வயிற்றில் வருமுதல் மகவே
இலைமலி வேலான் இன்உயிர்த் துணையே
மால்பெருங் கூத்தில் மகிழ்வுறும் அமுதே
சால்பொருங் குதவும் தடங்கைஐந் துடையாய்
சித்தி விநாயகத் தேசிக மணியே
இத்திருப் புதுவை யிடத்தெனைத் தொடர்ந்தாண்(டு)
அருந்தமிழ்ப் பனுவல் அறைகெனப் புகன்றாய்
வருந்துறும் மிடிபோய் மகிழ்வுறச் செய்வான்
கிளர்தரு கவியாற் கேட்டவர் வியப்ப
வளமைமா நகரின் [3]மாமைவெற் பிடைஓர்

---

1 கயமுகாசுரனை—இவன் யானைமுகத்துடனிருந்தவன். அவன் பின், பெருச்சாளியாகி வாகனமானான். 2 முந்நீர்—கடல், ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் கூடியது. 3 மாமை வெற்பு—மேருமலை.

உண்டைபேர்த்து அடியேற் குதவென இரந்த
பண்டைநாட் கடமைப் பரிசளித் தருளே. 13

### வெண்பா

அளிமுரல்வெண் டாமரையாள் அன்னபுல வோர்க்(கு)
[1]இளிவகுப்பார் ஈடழிவ தென்றே—களிறுமலி
வேதபுரிச் சித்தி விநாயகனே! வேலைசுற்றும்
பூதலமுற் றுய்யும் பொருட்டு. 14

### கட்டளைக்கலித்துறை

பொருட்பேயொன் றென்னை வருத்தாமல் இன்று புரந்தருளில்
அருட்பேறு பெற்றுய்கு வேனல்ல வோ,எண்ணில் ஆர்வமயத்
தெருட்போதத் தாருணர் சித்திவி நாயக! தேசிகனே!
மருட்போர்செய் யார்வளர் தென்புது வாபுரி வாழ்களிறே. 15

### அகவற்பா

வாழும் நான்மறை வகுத்தபல் தேவரும்
ஆழுமெய் யுணர்வினர் அனைவரும் விரும்பும்
இன்பிர ணவம்அல(து) இன்றெனத் தெரிந்தும்
என்பிழை தீர்ப்பார் யார்கொல்என் றையுற்று
எண்ணரும் பலவா றியற்றமிழ் பாடி
புண்ணடைந்(து)இற்றைப் பொழுதுன் அருளால்
அற்றிரள் கடுக்கும் ஆகுவா கனத்தைப்
பற்றிலார் புனையும் பதத்துணை மலரை,
வல்லவைச் சத்தி மருவெழிற் கவானைச்,
சொல்லரும் பெருமைத் துதிக்கையைக், கனியும்
வல்லதோர் வேதம் வரைதரு கோடும்
கொல்லலும் காத்தலும் குலவிரு தகைய
கயிறும் தோட்டியும் கவின்றநாற் றோளை
அயில்வன அன்றி, அழலுடற் றகுவன்
தன்னையும் சேர்த்தவிற் றும்வில்பேர் அகட்டை,
அன்னைதன் தனம்போன் றவிர்தரு களிற்று
மாமுகந் தன்னை மணிமுடி முதற்பகர்
தோமுரு மணிப்பணித் தொகையைப், பாந்தட்
கச்சை கொன்றை, கரந்தை, ஆதியை
இச்சை யிடைக்கொண் டெண்ணுறப் பெற்றேன்!

---

1 இளி-இகழ்ச்சி.

இனிதெனது இசையும் இழிவும்நின் றனவே
பனிவரைக் குயிலொடு பரசுடைப் பரமனும்
ஆவியிற் பெரிதென் றன்புறப், புதுவை
மேவிய சித்தி விநாயகத் தேவே. 16

வெண்பா

தேவர்குலம் வாழத் திறலார் பெருந்தகுவர்
யாவர்களும் தாழவென எண்ணியே—[1]சேவணியும்
கேதனத்தார் நல்கக் கிளர்சித்தி யானை,வை(கு)ஊர்
ஏதமில்சீர்த் தென்புதுவை யே. 17

கட்டளைக்கலித்துறை

ஏவற் றொழில்புரி கின்றத னாற்சிலர் ஈட்டுபெரும்
[2]பாவப் பொருளும் விழைந்தலை வேற்கருள் பாலிப்பையோ
நாவற்பொன் பூத்த, துவர்போலும் சித்திவி நாயகனே
[3]பூவத் திரம்பொரு சீர்ப்புது வாபுரிப் போதகமே. 18

அகவற்பா

போதகத் திருந்து புனித நான்மறை
ஓத வல்லான் ஓரெண் கரமும்
சீத நாண்மலர்ச் [4]சிலீமுகம் ஏந்தி
மாதரார் நடுவில் வருவான் வில்லும்,
அகமதிற் சற்றும் அருளில்பா தகரைப்
[5]பகடிவர்ந் தடுவான் பற்றிய தண்டும்,
தமியனேன் பனுவல் சாற்றினர் தமையும்
இமிழ்திரைப் பாரில் இடர்செயா வண்ணம்
செய்தற் பொருட்டுன் திருவருள் விழைந்தேன்
ஐயமுந் துயரும் அளவறப் பொருக்கினை
ஒரு[6]முப் புடைக்காய் உன்றிரு முன்னர்
தருதுபொன் றொப்பித் தாழ்குநர் சிந்தை
வேண்டுவ தாமும் விரைந்தரு ளிடும்நீ
ஈண்டுநான் தொகுக்கும் இயற்றொடை நிமித்தம்
ஒருசிறி திரங்கா(து) உறத்தகும் கொல்லோ
கருதுமா றின்னே கடைக்கணித் தருள்வாய்

---

1 சேவு அணியும் கேதனத்தார்–சிவன், சேவு–இடபம், சேதனம்–கொடி. 2 பாவப்பொருள்–உழுது ஈட்டாமல், தொழுது ஈட்டும் பொருள் என்க. 3 பூவத்திரம்–பூமியின் முகம். 4 சிலீமுகம்–அம்பு பூவம்புடைய வன் மன்மதன். 5. எருமைக்கடா. 6 முப்புடைக்காய்–தேங்காய்.

[1]மதுரை போலும் வான்புகழ் இந்தப்
புதுவை எய்தப் புரிந்திட ஆங்கு
நத்திய நாமம் நயந்துவீற் றிருக்கும்
சித்தி விநாயகச் செந்துவர்க் குன்றே. 19

வெண்பா

குன்றில் ஒருகதைமுன் கோட்டியகைத் தாட்டிகத்தால்
வென்றிமலி சித்தி விநாயகன்றன்—இன்(று)இப்
புதுவையினிற் போற்றெனக்குப் பூரியர்பாற் போகா
அதுபுரிந்தாற் போதுமம்மம் மா. 20

கட்டளைக்கலித்துறை

மானின்ற பெண்முன் மறுகிய சேந்தன் மகிழஅன்று
வேனிர்ங் கவுட்களி றுச்சென்ற சித்தி விநாயகன்றன்
தேனிந்த பூம்பொழில் சூழ்புது வாபுரிச் செம்பொன் வெஃகி
நானீண் டிறைஞ்சற் கிரங்கான்கொ லோவெள்ளை நாமகளே.21

அகவற்பா

நாமகள் போல்வார் நன்குணர் தரும்புகழ்க்
காமர்வான் களிற்றைக், [2]கற்பகத் தொகைநேர்
கையுடைத் தாய கடவுள்மா மணியைப்
பொய்யுளார் மனத்துட் புகுதாப் பொருப்பை
வேண்டுநர் பலர்க்கும் விக்கினம் அகற்றி
மாண்டுபின் பிறவா வரமருள் வானை,
யாவரும் முதற்போற் றிசைத்தினி திறைஞ்சும்
தேவ தேவனைச் சித்தி விநாயகப்
பெயர்புனை ஒருவனைப், பிரச நாண்மலர்ச்
சயமகள் அகலாத் தனித்திருப் புதுவையில்
கைகுவித் தியற்சொற் கவித்தொடை சாத்தச்
செய்குணம் அமைதரு சீரும் உடையேன்
இரட்டைப் புலவோர் இன்புறச் செம்பொன்
தரத்தகு துதிக்கைத் தன்மைகண் டுவக்கும்
பேறடை வேனோகொல்; இன்னமும் பிறர்பால்
சேறல்வேட் டொல்கித் திரிவேன் கொல்,இதன்
தெளிவுளா ராகிச் சேணகத்(து) இரதக்
[3]குளிகை யிட்டுக் குலாவுநர் பலரே. 22

---

1 மதுரையில் சித்தி விநாயகராக இருப்பதுபோல, புதுவையும் விளங்க அப்பெயருடன் இருப்பதைக் கூறியது. 2 கற்பகத்தருவைப்போன்ற ஊந்து கை. 3 குளிகை-ரசகுளிகை (வான்வழி செல்ல உதவுவது).

### வெண்பா

பலாவும் பனையும்வெட்டுப் பட்டவை,முன் போலக்
குலாவுநலம் செய்ததனைக் கூறில்—நிலாவுமணித்
துத்திஅர வும்புனலும் தோய்ந்தசடைத் தண்புதுவைச்
சித்திமத வேழச் செயல். 23

### கட்டளைக்கலித்துறை

செயங்கொண்ட வேல்மன்னர் தாமும் புகழ்ந்து தினம்வணங்கும்
வியங்கொண் டவக்(கு) ஔவையார்க் கீந்தசித்தி விநாயகனைப்
பயங்கொண்ட நெஞ்சுடை யோன்வாழ்த்தற்(கு) யாது பயன்நல்குமோ
நயங்கொண்ட வாய்மயில் கூவும் புதுவை நகரத்திலே. 24

### நிலைமண்டில ஆசிரியப்பா

[1]நகமகள் பயந்த நால்வாய் முக்கட்
புகர்முகக் களிற்றைப், புதுவையின் மேய
சித்தி விநாயகத் திருவருட் கடலைப்
பத்திமிக் குறும்ஓர் பார்ப்பனச் சேய்முன்
போற்றுபு தெரித்த புதுமை யாவும்
தோற்றுபா ருலகிற் சொல்வார் சொல்லினும்
[2]இன்னும் மகவாய் இயல்உணர்த் துநன்கை
துன்னுறு பிரம்பாற் றுயருறு புலவோர்
நம்பார்; நம்பி நாத்தழும் பேறச்
செம்பா கக்கவி கொடுமிகச் செப்பார்,
முள்மலி வேலி முயல்படு வளைதடி
கொள்மறக் குணத்துக் குறுவேந் தாதியர்க்
காக்கும் மாயன், காமன், காங்கெயன்,
ஆக்கும் என்னும் அவைமிகப் பாடி
வாயில்காப் பவரெதிர் மறுகி
நாயிற் கடையாய் நலமழி வாரே. 25

### வெண்பா

அழிவில்பர மானந்தம் அன்பர்பெறச் செய்வான்,
பொழிமதநீர் மூன்றுூர் பொருப்பே—எழில்வளம்
சேரும் புதுவைநகர்ச் சித்தி விநாயகனே
பாருனது கண்ணுற் பரிந்து. 26

---

1 நகமகள்-மலைஅரசன் மகளான பார்வதியம்மை. 2 மறுபடியும் பிறந்து. ஒரு ஆசிரியன் மூலம் தமிழ் உணர்த்தக் கற்று அவர் பிரம்பால் அடிபேற்று வருந்தி இருப்போர் நம்பமாட்டார்கள்.

கட்டளைக்கலித்துறை

பரிக்கும் கரிக்கும்முன் சென்றெளவை வெள்ளிப் பருப்பதத்தில்
சரிக்கும் படிசெய்யின் கைக்கே அடைக்கலம்; தாரணியும்
சிரிக்கும் பழவினைப் புன்பயன் தீர்த்தருள் சீர்ப்புதுவா
புரிக்குஞ் சரத்தலைச் சித்தி விநாயகப் புண்ணியனே. 27

அகவற்பா

புண்பொலி நெஞ்சப் புழுக்கந் தவிர்ந்தருட்
கண்பெறு மாறு கருணை புரிவாய்
நின்துணைக் குகன்சொல் நெறிவழி போலுப்
வன்துய ருழந்த மறக்கமுற் றறிவாய்!
செங்குன் றூர்முதல் சிலதலத் தென்பால்
கங்குல் ஏய்க்கும் களத்தான் கழறலும்
மயில்பொரு சாயல் மலைமக ளன்பில்
பயிலிய வாய பற்பல மொழியும்
இளர்வளத் தல்விக் கேணியாதியில்
துளவ மாயவன் சொல்பல சொல்லும்
பயன்த ராமையிற் பரதவிக் கின்றேன்,
அயர்ந்தேன் குறுமா(று) அவைபொரு மாற்றம்
பகரேல்! என்னுட் பலவிசை வந்தும்
அகம்நோ வுறப்பிழை அறைந்திலை! ஆதலின்
தீயோர் வெருளும் திறலொடு திகழ்வேன்
என்ன நம்பும் எனைப்புறத்(து) இகழேல்
பன்னகக் கோமான் பருவரல் ஒழித்தாய்
நாரதன் வேண்ட நற்புகழ்ச் சனகன்
ஊரகத் தேகி ஒருவா றுடினை!
கமலன் ஆதிய காய்சினத் தகுவர்
தமரொடு மாயச் சமர்மிகப் புரிந்தனை!
நன்றெடு தீதிலும் நடு இருந் தருளினை!
பொன்தொகு பணியும் புயங்கமும் பூண்டனை!
தென்புது வைக்கண் சித்திவி நாயகன்
என்புகழ்ப் பெயர்கொண் டிலங்கும்எம் மானே. 28

வெண்பா

எம்மானே! வேதபுரி யீசன் தருமகனே
மெய்ம்மாருச் சித்தி விநாயகனே—சும்மா
இருக்கும்நிலை யின்றுதவேல், ஈனரஞ்சச் செய்வான்
திருக்கடைக்கண் ணுலருள்என் சித்து. 29

### கட்டளைக்கலித்துறை

சித்திவி நாயகனேற்றமு ளான்மகிழ் சீர்செய்பிர
சித்திவி நாயக னேமியுய் வான்தொழு தேன்,எனுள்வ
சித்திவி நாயகனே நான்எள்ளேல் வளம் சேர்புதுவைச்
சித்திவி நாயகனே தருவாய்நின் திருவருளே. 30

### பொருள்

சித்தி—எண்சித்திகளைப்பெறுவதுடன்
வி—விசேடமான
நாய—பெருமையமைந்த
கன்—மலைநிலக்கடவுளாகி (அங்கு)
ஏற்றமுளான்—வாழும் முருகனைப் போல
மகிழ்—களிப்பையும்
சீர்—அருட்சிறப்பையும் எய்துமாறு
செய்—செய்தருள்வீராக !
பிரசித்தி—புகழ்ச்சி
வி—மிகுந்துள்ள
நாயக—தலைவனே
நேமி—வட்டமான உலகம்
உய்வான்—நலம்பெறுவதற்காக
தொழுதேன்—உம்மைத்தொழுதேன்
என்உள்—என்மனதில்
வசித்தி—நீங்காமலிருக்கவேண்டும்
வி—வெறுக்கத்தக்க
நாய்—நாய்போற் புலனுகர்ச்சிமிக்க
அகனே—மனமுடையவன்தான்
நான்—அடியேன், (ஆயினும்)
எள்ளேல்—இகழ்ந்துதள்ளவேண்டாம்
வளம்சேர்—பல சிறப்புமிக்க
புதுவை—புதுவையில் எழுந்தருளியுள்ள
சித்திவிநாயகனே—சித்திவிநாயகப் பெருமானே
நின்—உமது
திருவருள்—மேலான அருட்பேற்றினை
தருவாய்—கொடுத்தருளவேண்டும்
எ—று. ஏ. ஈற்றசை.

### நூற்பயன் – வெண்பா

புத்தியுளார் வாழும் புதுவா புரியிலவிர்
சித்தி விநாயகன் பொற் சேவடிக்காம்— பத்திமலி
மும்மணிக் கோவை மொழிவார் எவரெனினும்
*அம்மணிக்கோ வையனொப்பா வார்.

| 1. | 2 | 3. |
|---|---|---|
| *அம்—அழகிய | *அம்-(கேட்டதைத்தருவதான) அந்த | *அம்—அழகினை |
| மணி—நீலமணிபோன்ற காளகண்டனை | மணி—சிந்தாமணியையுடைய | அ(ண்)ணி—பொருந்தியவனும் |
| கோ—சிவபிரானளித்த | கோ—தலைவனை | கோ—மலரம்புகள் |
| ஐயன்—முருகப்பெருமானை | ஐயன்—இந்திரனை | ஐ அன்—ஐந்தையுடையவனுமான் மன்மதனை |
| ஒப்பாவார்—ஒத்து விளங்குவார் | ஒப்பாவார்—ஒத்து வாழ்வார் | ஒப்பாவார்—ஒப்பாக வாழ்வார் |

1. அருளிலும், 2. செல்வத்திலும், 3. இன்ப வாழ்விலும் சிறந்து வாழ்வாரென்பதாக ஈற்றடிக்கு, மூன்று பொருள் இருப்பது காண்க.

முற்றிற்று.

ஹனுமான் அச்சியந்திரசாலை, விழுப்புரம